[6th September 1960

*Tea Estate (Periyakulam)*

* 463 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை ஜில்லா பெரியகுளம் தாலுக்காவில் உள்ள ஹைவேஸ் தேயிலை எஸ்டேட்டுக்கு பாரஸ்ட் நிலத்தில் எத்தனை ஏக்கர் குத்தகைக்கு விடப்பட்டது ?

(ஆ) அந்நிலங்களுக்கு வருடத்திற்கு என்ன குத்தகை வாங்கப்படுகிறது ?

(இ) மொத்தம் எத்தனை ஏக்கர் தேயிலை பயிரிடப்படுகிறது ?

(ஈ) இப்படி பாரஸ்ட் நிலத்தில் மற்றவர்களுக்கும் குத்த கைக்கு விட உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) An area of 9,894 acres and 62 cents in Narayanathevanpatti village (Cumbum Range) was assigned to the Highway Tea Estate;

(*b*) the question of collection of rent does not arise, as this is not a lease;

(*c*) 1,279·46 acres; and

(*d*) there are no fresh proposals to grant leases of forest lands *for tea cultivation*. But, there is a proposal to lease out suitable areas in Cumbum Range for cardamom cultivation.

SRI N. R. THIAGARAJAN : நாராயணதேவன்பட்டி கிராமம் மாத்திரம் இல்லாமல் நரசிங்க கிராமத்திலும் தேயிலைத் தோட்டம் பயிர் செய்யப்படுகிறது. இதைத் தவிர வேறு யாரேனும் தேயிலைத் தோட்டம் வைக்கவேண்டுமென்றால் இதைப் போலக் குத்தகைக்கு கொடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பு தேயிலைத் தோட்டம் விருத்தி செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு கொடுக்கப்பட்டது. இப்போது அதேமாதிரி கேட்பவர்களுக்கு எல்லாம் கொடுப்பதாக உத்தேசம் இல்லை.

*Ambar charka*

* 464 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கதர், கிராமக் கைத்தொழில் போர்டிலிருந்து இதுவரை நம் மாநில அரசாங்கத்துக்கு அம்பர் சர்க்கா அபிவிருத்திக்காக எவ்வளவு ரூபாய் அனுமதிக்கப்பட்டிருக்கிறது ?

(ஆ) அந்தத் தொகையில் எவ்வளவு இதுவரை மாநில அரசாங்கத்தாரால் பயன்படுத்திக் கொள்ளப்பட்டிருக்கிறது ?

(இ) மீதமிருக்கும் தொகையைப் பயன்படுத்த அரசாங்கம் என்ன திட்டமிட்டிருக்கிறது ?

6th September 1960]

(ஈ) இம்மாநிலத்தில் அம்பர் சர்க்கா எங்கு உற்பத்தியாகிறது ?

(உ) எத்தனை அம்பர் சர்க்காக்கள் எங்கெங்கே விநியோகிக்கப்பட்டிருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) to (e) Information is being collected and will be placed on the table of the House as soon as possible.

SRI A. VEDARATHNAM : காதி அண்ட் வில்லேஜ் இண்டஸ்ட்ரீஸ் போர்டினால் இதற்காக பயன்பட ஒருகோடி ரூபாய் உதவப்படுகிறது. எந்தவகையில் அது பயன்படுத்தப்பட்டு வருகிறது என்று தயவு செய்து சொல்லமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி தனிக் கேள்வி போட்டால் எல்லா விவரங்களும் கொடுக்கப்படும்.

*Overhead tanks*

* 465 Q.—S. M. ANNAMALAI : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

வட ஆற்காடு மாவட்ட போளூர், களம்பூர் கிராமங்களின் குடி தண்ணீர் வசதிக்காக overhead tanks கட்டும் விஷயம் எந்த நிலையில் உள்ளது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : *Polur*.—There is no proposal at present to construct an overhead tank at Polur.

*Kalambur*.—There is already an overhead tank at Kalambur. The construction of an additional overhead tank has been included in the programme for 1960–61 under the Rural Water Supply Comprehensive Programme and the Work is likely to be taken up in due course.

SRI S. M. ANNAMALAI : போளூருக்கு ஸ்கீம் இல்லையென்று அமைச்சர் அவர்கள் பதில் சொன்னார்கள். அந்த இடத்தில் கூட வருஷந்தோறும் கோடை காலங்களில் ரேஷன் கோட்டாபடிதான் தண்ணீர் கொடுக்கவேண்டியிருக்கிறது. ஆகவே தேசிய குடி தண்ணீர் விஸ்தரிப்புத் திட்டத்தின்கீழ் அங்கும் ஒரு திட்டம் வகுக்க சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : அங்கே தண்ணீருக்கு பல ஏற்பாடுகள் இப்போதே செய்யப்பட்டிருக்கிறது. கிணறுகளை எல்லாம் ஆழப்படுத்திக்கொண்டு வருகிறார்கள். சுமார் நாற்பது, நாற்பத்துமூன்று குடிதண்ணீர் கிணறுகள் அங்கே உதவி வருவதாகத் தகவல் இருக்கிறது. நல்லவேளையாக போன வாரம் அங்கே ஐந்து சுழி மழை பெய்திருக்கிறது.